# குடிகாட்டு

# வேழமுகன் வெண்பா மாலை





ஆக்கியோன் :

மீ. ப. சோமசுந்தரம்

' சோமு '

உ

தும்பிக்கை துணை

குடிகாட்டு

# வேழமுகன்

## வெண்பாமாலை



ஆசிரியர் :

**மீ. ப. சோமசுந்தரம்**

['சோமு']

முதற்பதிப்பு:
சௌமிய ஆண்டு தை மாதம்
ஜனவரி, 1970
இலவச வெளியீடு
வெளியிட்டோர்:—
திருமதி பச்சை சோமசுந்தரம்
10, ஈஸ்ட் ஸ்ர்குலர் ரோடு,
மந்தைவெளிப்பாக்கம்,
சென்னை-28.

மாருதி பிரஸ், சென்னை 14

## முன்னுரை

கூடிகாடு என்பது தென்னாற்காடு மாவட்டத்தின் தலைநகரமான கடலூர்ப் பழைய பட்டினத்துத் தெற்கு எல்லையில் உள்ளது.

வயல்களும், தென்னஞ் சோலைகளும், ஆல அரச மரங்களும், மாமரங்களும் சூழ்ந்த அழகான காட்டின் நடுவில், அல்லிக்குளமும், அதைக் கடந்து புகை வண்டி இருப்புப் பாதையைத்தாண்டியதும் ''கன்னி கோவில்'' என அழைக்கப்பெறும் பச்சையம்மன் கோயிலும் பார்க்கலாம்.

பச்சை என்பது 'மாதா, மரகத சியாமா' என்று வணங்கப்பெறும் அம்பாளின் திருநாமங்களில் ஒன்று. கன்னியாகுமரியில் தவம் செய்தவாறு நிற்கும் அன்னையைப்போலே இந்தக் கன்னி கோயிலிலும் நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகிறாள் உமை. சிவனை நாடித் தவம்புரிவதாக ஐதீகம்.

''பச்சை அவளுக்குப்
பாங்கிமார் ஆறெட்டு
கொச்சையார் எண்மர்கள்
கூடி வருதலால்'' (திருமூலர்)

என்னும் திருமந்திரத்தை நினைவூட்டுகிறபடி கருவறையில் பாங்கிமாரும் மற்றத் தேவதைகளும் காட்சி தருகிறார்கள். இவர்களில் மிகவும் முக்கியமானவள் தினைகாத்தாள், புனங்காத்தாள் என்று

அழைக்கப்பெறும் வள்ளிநாயகியான காத்தாள் அம்மன்; கூடைக் குறத்தியாகக் கோல் பிடித்துக் கையிலே மகவேந்தி நிற்கிருள்.

கொடிமரமும், நந்தியும், சிவன் சந்நிதியும், பழனியாண்டியும், வெளியே வாள்முனியும், கிராம தேவதைகளும் நிற்கிற மாண்பு கண்கொள்ளாத காட்சியாகும்.

கருவறைக்கு நுழைகிற முகப்பிலே வேழமுகன் விநாயகப் பெருமான் குந்தியிருந்து கோலம் தரு கிருன். இந்த நூல் அந்த வேழமுகனைத் துதிக்கிற வெண்பாமாலை.

என் மனைவியின் குடும்பத்திற்கு இஷ்ட தெய்வ மாக இணைந்த பச்சையன்னை என்னையும் ஆட் கொண்டு எப்போதும் வழிநடத்தி வருகிருள். எனவே வேழமுகன் வெண்பா மாலையும், பச்சை மணிமாலையுமாக இரண்டு நூல்கள் செய்து என் இஷ்ட தெய்வங்களுக்குக் காணிக்கை செலுத்த வேண்டும் என்ற ஓர் ஆசை உந்திச் செலுத்த அந்த உந்தலில் எழுந்த பாடல்களே இவை. பச்சைமணி மாலை என்ற நூல் தனியாக வெளிவரும். இப்போது வேழமுகன் வெண்பா மாலையை ஆனைமுகக் கடவு ளுக்கு உழுவலன்புடன் உவந்து அணிவிக்கிறேன்.

தும்பிக்கை துணை!

சௌமிய ஆண்டு,<br>தை மாதம்<br>ஜனவரி 1970

மீ. ப. சோமசுந்தரம்

## விநாயகர் காப்பு

வேழ முகத்தானை
வெற்றிக் கணபதியை
வாழ வழியருளும்
வாரணத்தைச்—சூழவே
பண்ணாரும் பைஞ்சோலைப்
பண்ணைக் குடிகாட்டில்
கண்ணாரக் கண்டதே
காப்பு.

## கோயிலுடையாள் துதி

பச்சைத் தனியரசி
பங்கயத்தின் பூவரசி
இச்சைக் கலையரசி
என்னரசி—மெச்சுகுடி
காட்டின் எழிலரசி
கண்பார்த்துக் காக்கவே
பாட்டின் நெறிநின்று
பார்த்து.

## குடிகாட்டுத் தெய்வங்கள் துதி

கணபதியே ஆண்டியப்பா
வாள்முனியே எங்கள்
குணவதியே கோல்பிடித்த
காத்தாள்—மணங்கமழும்
மாஞ்சோலை யோடு
வயல்சூழ் குடிகாட்டுக்
கான்சோலைத் தெய்வமெலாம்
காப்பு.

## ரசிகமணி வணக்கம்

கன்னித் தமிழின்
கவியுணர்த்த வந்துதித்தான்
மன்னி இதய
ஒலியானுன்—என்னினிய
எண்ணின் மணியாவான்
எந்தை ரசிகமணி
கண்ணின் மணிஅவனே
காப்பு.

## சித்தர் துதி

என்று வருவாய்நீ
    என்சித்தா என்குருவே
என்று தினமும்நான்
    ஏங்குகிறேன்—கன்றுகுரல்
கேட்ட வுடன்துள்ளிக்
    கேவிவரும் தாய்ப்பசுப்போல்
வாட்டம் அகற்றவேநீ
    வா.

## பாட்டுடைத் தலைவன் வேழமுகன் துதி

குடிகாட்டு வேழமுகன்
    குந்தி அமர்ந்த
படிமுகப்பில் நின்று
    பணிந்தேன்—அடியிணைகள்
பாட்டின் பொருளாகிப்
    பாடும் பதமாகிப்
பாட்டை இயக்கும்
    படி.

## அவை யடக்கம்

பண்கொண்டு பாடுதற்குப்
    பண்பார் குரலில்லை
எண்கொண்டே ஏடெழுத
    ஏர்பில்லை—கண்கொண்டு
கண்ணீர் பொழிவேன்
    கவிபொழிய வல்லேனோ
பண்ணைக் களிறேகண்
    பார்,

காட்டில் உலவும்
    களிறேநீ என்னுடைய
பாட்டில் உலவிப்
    பரிவுசெய்—ஏட்டிலிலா(து)
எண்ணச் சிறையுள்ளே
    ஏங்கிக் கிடப்பவற்றை
வண்ணக் கவியில்
    வடித்து.

சிரத்தின் மலரும்உன்
செம்மை எழில்சேர்
கரத்தின் மலருமே
கண்டு—தரத்திலே
ஏதும் உயர்வில்லா
ஏழையேன் என்மலரைப்
பாதத்தே வைத்தேன்
பணிந்து,

வெள்ளைக் கவியால்
விரும்பி மலர்புனையும்
பிள்ளை எனையும்நீ
பேணுவையோ—பிள்ளையப்பா
பாசத்தால் அர்ச்சித்த
பாதமலர்க் கில்லையால்
வாசத்தைப் பார்க்கும்
வழக்கு.

ஏழைக்குத் தக்கனே
எள்ளுருண்டை என்பார்கள்
வேழம் அதையும்
விரும்புமன்றே—வேழமுகா
பொன்கவிகள் கோடி
புலவர் உரைத்தாலும்
என்கவியும் நின்செவிக்கு
ஏற்பு.

நெஞ்சின் இழைகூட்டி
நெய்தேன்என் சொல்லாடை
பஞ்சென்று தள்ளாமற்
பாலித்து—விஞ்சுபுகழ்ப்
பண்ணைக் குடிகாட்டின்
பண்பார் களிறேநீ
அண்ணித் (து) அணியே
அதை.

## பாமாலை

வெயில்சூழ் வாழ்வில்
வெதும்பி உழன்றே
வயல் சூழ் பொழிற்சோலை
வந்தேன்—குயில்சூழ்ந்து
பண்குளிரப் பாடும்சீர்ப்
பண்ணைக் குடிகாட்டில்
கண்குளிரக் கண்டேன்
களிறு. 1

வெந்துயர வாழ்வின்
விதிவெப்பம் தாங்காமல்
இந்துமதிக் காயலைந்தே
ஏக்கமுற்றேன்—சிந்துமலர்ப்
பூவனத்தே வந்திடவும்
பொன்னிலவு பூத்ததுபோல்
காவனத்தே கண்டேன்
களிறு. 2

தண்ணிலவு போலவே
தண்ணொளிசெய் கண்ணிலவு
வெண்ணிலவு செய்கின்ற
விஞ்சைமுகம்—பெண்ணிலவு
பச்சை ஒளிசெய்
படிவாசல் முன்னேஎன்
இச்சை நிலவுகளி
றேறு. 3

எங்கும் இருள்படர்ந்தே
ஏங்கையிலே கண்டேனே
தெங்கு பொழிலூடு
தேனிலவு—துங்க
வனத்திற் குடிகாட்டில்
வந்த களிறென்
மனத்திற் குளிரும்
மதி. 4

கோலக் கணபதியே
கூடற் குடிகாட்டில்
சால அழகுடனே
சார்ந்திருந்தாய்—சோலை
புடைசூழும் கோயில்
புகுமுன் பணிந்தேன்
தடைநீக்கி நல்லவரம்
தா. 5

குடிகாட்டுப் பண்ணைக்
குளிர்சோலை சென்று
பிடிஈன்ற கன்றைப்
பிடித்தேன்—அடியார்கள்
கண்கலங்கத் தாங்காக்
கருணைவிழிப் பச்சையன்னை
பண்குலுங்கும் கோயிலிலே
பார்த்து. 6

வந்தித்தேன் வாழ்த்தினேன்
வாயாரப் பாடியுனைச்
சிந்தித்தேன் சிந்தை
திறைகொடுத்தேன்—பந்தித்தே
உன்னடிக்கீழ் என்வினையை
ஒப்படைத்தேன் வேழமுகா
இன்னொடியில் இன்னே
இரங்கு. 7

குடிகாட்டில் வாழும்
குணபதியே முன்வா
இடிகொட்டி மின்னும்
இருளில்—நொடிவீழ்ந்தேன்
செல்லும் வழிகாணேன்
சேரும் விதம்அறியேன்
ஒல்லையில் நீவந்(து)
உதவு. 8

பொருப்பில் எழுதும்கோல்
பொட்டென் றுடைய
மருப்பை ஒடித்தெழுதும்
மைந்தா—விருப்பாய்
முனிவன் கவியில்
முனைந்தாய் சுவையை
நினைந்தே உருகும்என்
நெஞ்சு. 9

குன்றில் எழுதுங்கால்
கோலுடையக் கொம்பிரண்டில்
ஒன்றை ஒடித்தாய்
உடன்எழுத—நன்றே
கவியின் உணர்வும்
கவிவரையும் உன்றன்
செவியின் உணர்வுமே
சேர்ந்து. 10

ஆரே தவமுடையார்
ஆரே கவிஞரிலே
ஆரே பெருமுனிபோல்
ஆவார்கள்—பேராச்
சிலைபோலே சொற்சிற்பம்
செய்தமைத்த தம்மா
மலைமேலே ஆனை
மருப்பு. 11

துதிக்கைப் பெருமானைத்
தூயானை என்றும்
துதிக்கைக் குரியானைத்
துன்னித்—துதித்தேன்
இடையூறு போக்கி
இனியன தேக்கித்
தடையான நீக்கித்
தர. 12

துதிக்கைப் பெருமானே
    தூயா சரணம்
துதிக்கைக் குரியா
    சரணம்—விதிக்கை
எழுதும் எழுத்தையெலாம்
    இன்னெழுத்தாய் மாற்றி
எழுதிக் களைவாய்
    இடர். 13

வேழமுகா உன்னோடு
    வேண்டுதல் செய்திட்டால்
சூழும்இடர் நீங்கிச்
    சுகம்பிறக்கும்—ஆழமாய்
உள்ளத்தின் உள்ளே
    உனைவைத்து வேண்டுகிறேன்
உள்ளிய(து) எல்லாம்
    உதவு. 14

வேழ முகமும்
    விழிதவழும் தண்ணருளும்
தாழும் துதிக்கையும்
    தாளிணையும்—ஏழையெனக்(கு)
என்றும் துணையலால்வே(று)
    ஏதும் துணையில்லை
நின்று படியளப்பாய்
    நீ. 15

கத்தும் கடல்சூழும்
காசினியி லேஎனக்குச்
சொத்தும் சுகமும்
துதிக்கையே—அத்திமுகா
எந்தையே என்இறையே
என்றும் உனதடிமை
வந்தித்தேன் ஆட்கொண்டு
வாழ்த்து. 16

வித்தாரம் பேசும்
விரிநூல்கள் எல்லாமே
முத்தான நீயே
முதலென்ப—சித்தான
தத்துவமே வேழமுகா
தாளிணைகள் சூடினேன்
நித்தியமாய் என்னுளத்தே
நில். 17

ஆனைமுகா என்றுசொன்னல்
போனபொருள் மீண்டுவரும்
ஆனைமுகா என்றழைத்தால்
ஆசிவரும்—ஆனைமுகன்
தான்வரவும் கூடவரும்
தாழாத செல்வங்கள்
ஊன்பரவு மேஉவகை
ஊற்று. 18

இடர்களைந்து நீக்கும்நல்
இன்பசுகம் தேக்கும்
தொடர்புடைய தொண்டருளம்
ஊக்கும்—திடமுடைய
ஆனை முகன்செய்யும்
ஆரா அருள்போலே
ஏனை எதுவும்
இலை. 19

நட்டார்க்கு வாழ்வுதரும்
நாயகனே உன்பாதம்
தொட்டார்க்கு நாளும்
சுகம்வளரும்—பட்டாங்கில்
கூறும் இருவினையும்
கோத்துவரும் பின்வினையும்
மாறும் படிசெயும்உன்
மாண்பு. 20

அஞ்சு கரமுடையாய்
ஆரா அருளுடையாய்
அஞ்சி வருவோரை
அஞ்சலென்பாய்—அஞ்சலிசெய்
தொண்டர் துயர்தீர்ப்பாய்
துய்க்க வரந்தருவாய்
அண்டும் எனைக்காத்தே
ஆள். 21

கையால் அடிபட்டும்
காலால் உதைபட்டும்
மெய்யால் நசுங்கியும்
மெத்தநொந்தேன்—ஐயாநீ
வேகமாய் ஆதரிக்கும்
வேழமுகன் என்றென்று
தாகமாய் வந்தேன்
தணி. 22

நைய வருத்தும்
நலிவால் மிகநொந்தே
ஐய உனைஅடைந்தேன்
ஆதரிப்பாய்—வையத்(து)
அரசாள வைப்பாய்நீ
அண்டிவந் தாரை
அரச மரத்தில்
அமர்ந்து. 23

என்றும் உனதடிமை
என்றே உனைஅடைந்தேன்
நன்றே வரச்செய்
நலிவகற்றி—அன்று
மலைமீ(து) எழுதியவா
மாற்றி எழு(து)என்
தலைமீ(து) அயன்எழுத்
தை. 24

ஆரும் எனக்கில்லை
ஆனைமுகா நின்னையல்லால்
தேரும் வழிகாணேன்
தெண்டனிட்டேன்—மேரு
மலைமேல் எழுதவல்லாய்
மற்றோர் பொருட்டோ
தலைமேல் திருத்திஎழு
தல். 25

வேழந்தான் உண்ட
விளங்கனிபோல் ஆகாமல்
ஏழையேன் வாழ்வில்
எழிலூட்டு—வேழமுகா
நின்னையே நம்பினேன்
நின்கழலே சூடினேன்
என்னைநீ ஆள்வாய்
இனிது. 26

பொய்யுலக வாழ்விலே
பொய்யான பேர்களால்
ஐயநான் மெத்த
அவதியுற்றேன்—மெய்யான
நல்வாழ்வு தந்துநீ
நல்வழியி லேநடத்திப்
பல்காலம் வாழப்
பணி. 27

தன்னலமே பேணும்
　　தமர்உறவு போதும்இனி
என்னலமும் என்வாழ்வும்
　　எண்ணலுற்றேன்—முன்னவனே
இன்னுள் வரைவீண்
　　இனியேனும் என்காலம்
பொன்னுகும் வண்ணம்
　　புரி. 28

செல்வம் கொடுத்தாலும்
　　செக்காய் உழைத்தாலும்
நல்லதுக்குக் காலமிது
　　நாளல்ல—எல்லாமே
வேழமுகா பொல்லாப்பாய்
　　வேதனையாய்ப் போயிற்றே
வாழுவகை காட்டாய்
　　வகுத்து. 29

நம்பும் மனிதரெலாம்
　　நம்பா நிலையானுர்
வம்பும் வழக்குமே
　　வந்தனவால்—தும்பியப்பா
தெய்வத் துணையல்லால்
　　தேரும் துணையில்லை
உய்வே உயிர்த்துணையே
　　ஊக்கு. 30

குடும்பத்தை வாட்டும்
கொடிதான நோயும்
இடும்பையும் நீக்கிடுவாய்
ஏறே—படும்பாடு
கொஞ்சமோ வேழமுகா
கோத்ததுயர் தாளாமே
அஞ்சினேன் இன்னல்
அகற்று. 31

குடிகா டுறையும்எம்
கோலப் பிடியின்
வடிவார் எழிற்கன்றே
வாநீ—இடிபட்டு
வாழ்வினடி தாங்காமல்
வாழ்த்துமடி வந்தடைந்தேன்
தாழ்வை உயர்த்திநீ
தாங்கு. 32

வாழத் தெரியாமல்
வாழ்ந்ததினிப் போதுமப்பா
வேழமுகா ஓட்டிவிடென்
வேதனையைப்—பாழாக
நாளும் விழலுக்கே
நான்இறைத்த நீர்போதும்
ஆளும் பதம்தந்தே
ஆள். 33

இன்னல் இழைக்கநண்ணும்
எம்பகையே ஆசைகளே
துன்னும் துயர்க்கணமே
தூரப்போம்—சொன்னேன்நான்
வம்புசெய வந்திரேல்
வாரி எறிந்திடுமே
கிம்புரிதன் கொம்பால்
கிளர்ந்து. 34

செத்த பிசாசுகளும்
செத்திடும் ஆவிகளும்
மெத்த அலையுமிங்கே
வேழமுகா—மொத்தமாய்
முன்னங்கை யால்வளைத்து
முட்டியே குத்திட்டுப்
பின்னங்கா லாலே
பிசை. 35

மோதகக் கையன்
முழுமுதல் முன்னவன்
பாதகம் நீக்கியருள்
பாலிப்பன்—போதகன்
எல்லாம் தரவல்ல
எம்பெருமான் என்நெஞ்சே
நல்லாசி பெற்று
நட. 36

உலகோர் துணையென்(று)
உறவோர் துணையென்(று)
உலவிய நெஞ்சே
உரைகேள்—பலகாலும்
வம்பின்றி வாழவும்
வண்ணங்கள் சூழவும்
தும்பிக்கை ஒன்றே
துணை. 37

கன்னங் கரியானைக்
கைஐந் துடையானைத்
துன்னி அடைவானைச்
சூழ்வானை—மன்னினேன்
என்ஆனைக் கன்றானை
என்னானை மன்னானைப்
பொன்னானைப் போற்றிப்
புகழ்ந்து. 38

ஆனை முகத்தானை
ஆதரிக்க வல்லானை
ஏனை எவரின்
இனியானைத்—தேனவனை
என்றும் இளையானை
இன்னல் களைவானை
ஒன்றி அடைந்தேன்
உவந்து. 39

நல்லானை யாவர்க்கும்
நாளும் நலம்புரிய
வல்லானை என்இனிய
வாரணனை—நெல்லார்
குடிகாட்டில் கண்டுநான்
கும்பிட்டு நின்றேன்
குடிகாப்பான் என்று
குறித்து. 40

மனமெனும் காட்டில்
மவுனத் தறியில்
கனவெனும் சங்கிலியில்
கட்டுண்டு—அனுதினமும்
ஆனந்த மான
அமுத மதம்பொழியும்
தானந்த மானவேழந்
தான். 41

எண்ணில் துயர்களையும்
ஏக்கம் தொலைவித்தே
மண்ணில் சுகவாழ்வை
மலர்விக்கும்—விண்ணிலே
நீட்டும் கதிர்நிமிர்ந்த
நெல்வயல்கள் சூழ்ந்தகுடி
காட்டில் அமர்ந்த
களிறு. 42

காலால் அழித்திட்டுக்
கைம்மருப்பால் வேறெழுதி
மேலாம் சுகவாழ்வை
மேவுவிக்கும்—கோலால்
அழுத்தி எழுதும்
அயனர் எழுத்தை
வழுத்தும் மதகளிறு
வந்து. 43

தந்தி தடம்பிடித்துத்
தாண்டினேன் ஊழ்வினையைத்
தந்தி அருள்நிழலில்
தங்கினேன்—எந்தை
பொறுமையால் என்னைப்
பொறுத்தாண்டு கொண்டான்
வறுமைநோய் வாராத
வாறு. 44

எத்தனை செல்வங்கள்
இவ்வுலகில் உண்டுமோ
அத்தன்அவை அத்தனையும்
தந்திடுவான்—அத்திமுகன்
ஆர்ந்த அருளாளன்
ஆர்க்கும் கருணையினன்
சார்ந்தேனைத் தாங்குவனே
சார்ந்து. 45

இருகை பகைமுடிக்கும்
இன்னிருகை செல்வம்
உருகும் உளத்தோடு
உதவும்—ஒருகைதான்
ஞானம் உவந்தளிக்கும்
ஞாலத்தே ஐந்துகரம்
வானத் திருந்திறங்கி
வந்து. 46

துய்க்கும் பொருளனைத்தும்
துய்க்கப் பெறலாம்பின்
மெய்க்கும் பதம்சென்று
மேவிடலாம்—எய்க்கும்
துயர்வாழ்வு மாற்றித்
துதிக்கைக் களிறு
உயர்வாழ்வு நல்கும்
உகந்து. 47

வேதப் பொருளானை
வேழ முகத்தானை
ஓதும் அடியார்
உளத்தானைத்—தீதில்
வழியருளும் வாரணனை
வாழ்த்திடவா நெஞ்சே
பழியுருளும் பாவம்போம்
பார், 48

எனையுண்டு வந்த
எனதான பொல்லா
வினையுண்டு தேங்காய்
விடலை—மனையுண்டு
வாழ வழியுண்டு
வாழ்த்தும் துணையுண்டு
வேழமும் உண்டே
விளக்கு. 49

தும்பி துணையுண்டு
தும்பிக்கை உண்டதனை
நம்பி வழுத்த
நலமுண்டு—நம்பன்
கழலுண்டு கண்டாய்
கரம்பற்றி நிற்க
அழவேண்டாம் நெஞ்சேநீ
ஆறு. 50

காடெல்லாம் சுற்றும்
களிறே பொழிற்குடி
காடெல்லாம் சுற்றுகிற
கற்பகமே—காடொன்றென்
உள்ளத்தின் உள்ளேயே
உள்ளதால் நீஎன்னைத்
தள்ளாமல் வந்திங்கே
தங்கு. 51

மலையெல்லாம் சுற்றுகிற
மாண்புக் களிறே
மலையாகும் இந்த
மனந்தான்—உலவிடவே
எம்மலையும் காணா
இருட்கா(டு) இதில்உண்டால்
இம்மலையில் வந்தே
இரு. 52

பூவுண்டு நெஞ்சம்
புனலுண்டு கண்ணீர்என்
நாவுண்டு நாதமணி
நாளுமே—தீயுண்ட
வெவ்வினையே கற்பூரம்
வேழமுகற்(கு) என்றும்நான்
செய்வினையே பூசைஎனச்
செப்பு. 53

ஆனையே அப்பா
அழகமர் செல்வாஎன்
ஊனையே என்றும்
உருக்குவைநீ—வானையே
நோக்கும் பயிர்போலே
நோக்கினேன் உன்னையே
சீக்கிரம் பெய்யாய்
மழை. 54

முன்னவனே முன்னே
முனைந்துநின்றால் ஆகாத
நன்னலங்கள் உண்டோஇந்
நானிலத்தே—என்னினிய
அற்புதமே வேழமுகா
ஆமென்று சொல்லிஉயர்
நற்பதமே இன்றெனக்கு
நல்கு. 55

குடிகாட்டில் வந்துநீ
குந்தியசீர்க் கோல
வடிவினிலே நெஞ்சம்
வசமாய்—அடிபற்றித்
தொண்டுசெயும் ஆசை
தொடரவே வேழமுகா
அண்டினேன் அப்பா
அருள். 56

ஆனை அருளாலே
ஆயிரமாம் பேறுபெற்றோம்
ஆனை அருளால்
அருள்பெற்றோம்—ஆனைமுகன்
நன்னலங்கள் ஈந்தானே
நன்னெஞ்சே நீஅவனைத்
துன்னிநிதம் ஏத்தித்
துதி. 57

வேழமுகன் ஊழின்
 வினைதீர்த்துக் காப்பான்என்
வேழமுகன் நல்குவான்
 வேண்டுவரம்—வேழமுகன்
என்றும் அருள்வான்என்(று)
 என்நெஞ்சே நீஅவனைச்
சென்று குடிகாட்டில்
 சேர். 58

கடலூர்ப் புறத்தேஓர்
 காடுளதால் அங்கே
கடலாம் துயரைக்
 கடக்கப்—படகுளது
நம்பிக்கை யோடதனை
 நண்ணி இவர்ந்தார்க்குத்
தும்பிக்கை உண்டே
 துடுப்பு. 59

துதிக்கைக் குரிய
 துதிக்கைக் களிற்றைத்
துதிக்கை காலைக்
 கதிர்வந்—துதிக்கையிலே
பின்னிந் துதிக்கையிலே
 என்றின்றி நெஞ்சேநீ
துன்னிஎப் போதும்
 துதி. 60

கரிமுக அம்பி
    கடலைக் கடக்கும்
கரிமுகத் தும்பி
    கடக்கும்—விரிகடல்
வெய்ய வினைக்கடல்
    ஏழ்பிற விக்கடல்
ஐய படகி(து)
    அரிது. 61

ஞானக் களிறேஇஞ்
    ஞாலத் தரசேநீ
மோன நடுவுள்
    முகிழ்மலரே—ஊனுள்ளே
உற்ற உணர்வே
    உணர்வில் உறுசுவையே
முற்றச் சுகந்தா
    முனைந்து. 62

நாவால் மொழிந்தும்
    நையுமனத் தால்நினைந்தும்
பூவால் பொழிந்தும்
    புலம்பினேன்—காவாயோ
கோலக் குடிகாட்டுக்
    குஞ்சரமே கூவினனே
ஓலங்கேட் காதோ
    செவி. 63

கோலமாம் ஏகத்தே
    கோத்திடு மோனத்தே
நீலமாத் தும்பிவந்து
    நிற்கவும்—தூலமாய்
விண்ணிலே மின்னல்
    விளையாடி நிற்றல்போல்
கண்ணிலே துள்ளும்
    களிப்பு. 64

மந்திரமும் தேராமல்
    எந்திரமும் ஓராமல்
தந்திரமாம் யோகமுறை
    சாராமல்—வெந்துயரப்
பூட்டிலே மாட்டிப்
    புலம்பும் மடநெஞ்சே
காட்டிலே உண்டு
    களிறு. 65

கையும் துதிக்கையோ
    கண்ணும் கமலமோ
மெய்யும் களிறோ
    மழைமுகிலோ—செய்யும்
வினையெல்லாம் தண்ணருளோ
    வேழமுகற் கென்றும்
எனைநானே ஒப்பித்த
    வாறு. 66

ஐந்துபுல னும்வளைக்குள்
ஐந்தெலிகள் வாழ்கின்ற
ஐந்துகரன் வந்தவற்றை
ஆளானேல்—நைந்துழைத்துச்
சேமித்த நெல்லிழந்து
செய்கை மயங்குமே
நேமித்த காவலின்றி
நெஞ்சு. 67

பொறிக்குள் எலிகள்
புகுந்துவிளை யாடில்
பொறிக்கோர் பொறிதேடிப்
போந்தே—பொறிகடந்த
ஞானக் களிறேறும்
ஞாலத் தெலிமீதில்
மோனப் பொறியை
முடுக்கு. 68

மனமெனும் சிப்பியுள்
மாணிக்கம் வைத்துக்
கனவுள் அதனைச்
கனற்றுப்—நனவில்
ஒளிக்கும் பிறங்கி
ஒளிசெய்யும் இன்பம்
அளிக்கும் களிற்றின்
அருள். 69

கந்தனுக்கே அண்ணனவன்
சொந்தனுக்கே அப்பனவன்
எந்தனுக்கோ ஐயனவன்
எல்லாமே—வந்தனைசெய்
பண்ணைக் குடிகாட்டில்
பார்த்ததுமே உள்ளத்தே
நண்ணி அமர்ந்தான்
நயந்து. 70

வேழமுகா என்னை
விரும்பிநீ ஆட்கொண்டால்
வாழுவகை தானே
வசமாகும்—ஏழைமை
தானே விலகும்
தடைகள் ஒதுங்கிநலம்
தானே உருவாகும்
தான். 71

மனமாம் குகையில்
வதியும் களிறே
கனவில் உலவும்
களிப்பே—நனவாகி
என்னருகில் நின்றே
எனைப்புரக்கும் காப்பேநீ
உன்மொழியை என்குரலில்
ஓது. 72

என்னோடு நீவந்(து)
இணைந்தபின் நீவேறோ
உன்னோடு நான்கலந்(து)
ஒன்றினேன்—பொன்னோடு
செம்பு கலந்தபின்
செம்பொற் களிறேநான்
செம்பில்லை பொன்னலவோ
செப்பு. 73

வாசம் குடிகாடோ
வானுலகோ சூடுவதும்
பாசத் தமிழோ
பசும்புல்லோ—ஆசனந்தான்
ஏழையேன் உள்ளமோ
இல்லையேல் பொற்தவிசோ
வேழமே நீதான்
விளம்பு. 74

நாசியால் மூச்சுயிர்த்தல்
நானிலத்தில் இல்லைஇனி
வாசியால் தும்பிக்கை
வந்ததம்மா—ஊசிமுனை
நின்றது பார்வை
நிகழ்ந்தது யோகம்நாம்
வென்றோம் நமனை
விழித்து. 75

சந்திரரும் சூரியரும்
சந்தித்தார் நீள்விசும்பில்
அந்தரமும் மண்ணும்
அணைந்தனவே—புந்தியிலே
ஆனை அமர்ந்ததம்மா
ஐங்கரமும் சேர்ந்ததம்மா
ஏனை உரைகள்
எதற்கு. 76

ஆகாயப் பொய்கையிலே
அல்லி மலர்ந்திடவும்
மாகாயப் பெட்டி
மணக்குதம்மா—ஏகாந்தக்
காட்டுக் குடியின்
களிறும் ஒளிருதம்மா
வீட்டுத் திரியில்
விளக்கு. 77

காட்டில் எரிகின்ற
கண்கவரும் ஞானஒளி
வீட்டில் சுடரீ
விளக்காகும்—பாட்டில்
உலவும் களி(று)என்
உளத்தே புகுந்து
நிலவும் மொழியாம்
நிவந்து. 78

கற்ற மொழியெல்லாம்
கானக் களிற்றுக்கே
உற்ற கவியாய்
உரைத்திட்டேன்—எற்றுகிகாய்
நான்பிறந்தேன் என்பதின்று
நன்ருய் அறிந்தேனே
ஊன்பிறந்த பேற்றை
உணர்ந்து. 79

சால அழகியதாய்ச்
சார்ந்தோரை ஈர்ப்பதுவாய்க்
கோல மலர்நகையில்
கொஞ்சுவதாய்ப்—பால்முகத்தே
கோடொன்று பூத்துக்
கூவிளமை யோடுகுடி
காடொன்று மேஆனைக்
கன்று. 80

எண்ணத் தகாதன
எண்ணிய குற்றம்உனை
எண்ணு திருந்தகுற்றம்
எல்லாமும்—பண்ணைகுடி
காட்டில் அமர்ந்த
களிறே பொறுத்தென்னை
வாட்டாமல் நல்குநல்
வாழ்வு. 81

எண்ணாத தீதெண்ணம்
 எண்ணியதும் உன்னைநான்
எண்ணாமற் போனதுவும்
 எல்லாமும்—புண்ணியனே
சாலப் பொறுத்தென்னைச்
 சார்ந்தே திருவருள்செய்
காலைப் பிடித்தேன்
 கனிந்து. 82

வேழ முகத்தரசே
 வேண்டுவார் உள்ளத்தின்
ஆழத்தே பூத்த
 அருள்மலரே—வாழத்
தெரியாத நெஞ்சைத்
 தெளிவாக்கி ஆர்க்கும்
புரியாத நன்மை
 புரி. 83

ஏதேதோ எண்ணத்(து)
 இழைகள் தடுமாறிச்
சூதாய் மனத்தறியில்
 சுற்றினவே—தோதாகச்
சிக்கல் எடுத்துள்ளம்
 சீராக்கி நெய்திடென்
பக்கத் திருந்துநீ
 பார்த்து. 84

நெய்து வருகையிலே
நெஞ்சத் தறியுள்ளே
பெய்தநூல் சிக்கிப்
பிணைந்ததந்தோ—ஐயாநீ
எல்லாம் கழற்றவல்லாய்
ஏதும் பிணைக்கவல்லாய்
நல்ல நெசவு
நடத்து. 85

ஆனை வசமானால்
அம்பாரி ஏறிடலாம்
ஏனைச் சுகமனைத்தும்
எய்திடலாம்—பானையெலாம்
தங்கம் நிறைத்திடலாம்
தாரணியை ஆண்டிடலாம்
எங்குநமக் கில்லையே
ஈடு. 86

நாவலரின் சொற்பொருளாம்
நான்மறையின் உட்பொருளாம்
பாவலரின் கற்பனையாம்
பாடலாம்—காவலர்தம்
செங்கோலின் மீதியங்கும்
செம்மை அறமாமே
எங்கோலக் கொம்பன்
இகல். 87

ஆரணங்கள் காணு
அடியால் நடந்திட்டு
வாரணந்தான் பண்ணை
வயல்கடந்து—காரணியாள்
பச்சை திருக்கோயிற்
பாங்கில் அமர்ந்தானுல்
இச்சைக் களிறவனை
ஏத்து. 88

ஞாழல் மதுவுண்டு
ஞான இசையூட்ட
வேழம் செவியுண்டு
வீற்றிருக்கும்—சூழ
வயலுண்டு பண்ணை
வளமுண்டு கண்டு
மயலுண்டு நிற்கும்
மனம். 89

காடுறையும் குஞ்சரமே
காக்கும் குலக்கொழுந்தே
வீடுறைய வாநீ
விரைவாகப்—பாடுறையும்
நோயுறையும் பேயுறையும்
நொய்ம்மை உறையுமிங்கே
நீயுறையில் அத்தனையும்
நீறு. 90

கனவில் ஒருநாள்
களிறென்று வந்தே
கனவில் நனவூட்டிக்
காட்டத்—தினமுமே
தும்பிக்கை யான்வருவன்
தூக்கம் துடைப்பனென்றே
நம்பிக்கை யோடிருப்பன்
நான். 91

தும்பி வளைத்தகை
துன்பம் துடைக்கும்கை
நம்பி அடைந்தோர்க்கு
நல்கும்கை—எம்பிரான்
ஈகையினுல் உள்ளம்
இரங்கையினுல் உய்ந்திடலாம்
ஆகையினுல் நெஞ்சமே
ஆறு. 92

விண்ணிற் பொழியும்
விரிகங்கை நீராட்டேன்
கண்ணின் புனலால்
கழல்நனைத்தேன்—எண்ணும்
எழுத்துமே நீயாகி
என்னுட் கலந்தாய்
வழுத்துவ(து) என்சொல்லி
வாய், 93

அண்ணாவே அப்பாவே
அம்மாவே ஆனபல
நண்ணும் உறவுகளின்
நாயகமே—கண்ணேஎன்
கண்ணுள் ஒளியாய்க்
கனலும் சுடரேநீ
என்னுள்ளே என்றும்
இலங்கு. 94

கல்லாகிக் கல்லிற்
கடவுளும் ஆகிஎன்றன்
சொல்லாகி என்கவியின்
சொற்பொருளாய்—நல்லாசி
கொண்டுவந்த வான்தெய்வக்
குஞ்சரமே என்வேண்டல்
கொண்டுவந்து தாநன்
கொடை. 95

நாவால் இழைகூட்டி
நாத மலர்தொடுத்துப்
பாவாலே பூமாலைப்
பண்புனைந்தேன்—மேவி
உளம்உவந்து சூடினனால்
உற்றகுடி காட்டுக்
களம்உவந்து வந்த
களிறு. 96

கள்ளமனக் காட்டில்
களிறு புகுந்திட்டு
முள்மரங்கள் எல்லாம்
முறித்திட்டுப்—பள்ளமும்
மேடும் நிரத்திட்டு
மேழித் துதிக்கையால்
நீடுழவு செய்யும்
நிலத்து. 97

ஆனை உழுத
அளர்மனத்தே நான்விதைத்தேன்
மோனப் பயிரின்
முழுவித்தைக்—கானகத்துப்
பண்ணைக் களரில்
பயிர்முளைத்த காட்சியைக்
கண்ணாலே பார்த்துக்
களித்து. 98

ஒலியால் சுமக்க
எளிதாய் இறைவன்
ஒலியின் உருவில்
உலவும்—ஒலியாகும்
ஓங்கார மான
உறுபொருளைச் சார்ந்தார்க்கே
ஏங்காமல் ஏகும்
எலி, 99

களரும் கழனியாம்
காணும் வயலாம்
விழரும் விளைநிலமாம்
விந்தை—களிறேஉன்
பண்ணைக் குடிகாட்டில்
பார்த்த பொழுதேநான்
என்னை உனக்காக்கி
னேன். 100

தூங்குகை வேழம்
தொடர்புற்ற நாள்முதலாய்
தூங்குகை இல்லை
துயர்இல்லை—தூங்காமல்
உள்ளம் மயங்கி
உணர்வுள்ளே தூங்குமது
கள்ளில் துயிலும்
களிப்பு. 101

உருவம் பெரிதுன்றன்
உள்ளம் பெரிது
தருநல் வரமும்
பெரிதே—பருவத்தே
பெய்யும் பெருமழைபோல்
பெய்கருணை தான்பெரிதால்
ஐய பெரிதுன்
அருள். 102

கார்முகில்போல் பேர்உருவம்
கார்மழைபோல் பேர்உள்ளம்
ஆர்துயரும் தாங்கா
அருங்கருணை—பார்உலகில்
ஈதற்(கு) எனவேநீண்(டு)
எய்தும் துதிக்கையா
ஓதற்(கு) உகப்புஉன்
உறவு. 103

வான முகில்ஒன்று
வையத்தே வந்ததுபோல்
கானக் குடிகாட்டுக்
கன்னிமுன்னே—தேனமரும்
பூவார் பொழில்முகப்பில்
பொற்களிறு வீற்றிருக்கும்
வாவா எனஅழைத்த
வாறு. 104

அன்றவனை வேண்டி
அருள்பெறவே நின்றேனல்
நின்றவனை வேழம்
நிலைநோக்கிச்—சென்றிடுவாய்
உன்னோடே என்றும்
உறவானேன் என்றானல்
பின்னோடே வந்தானே
பின். 105

முன்னவனே வேழமுகா
முன்னைப் பிறவியெலாம்
என்னவனே என்னுடைய
இன்னரசே—நின்னவன்யான்
என்றே கருதி
இரங்கிநீ முன்வந்தால்
இன்றே தொலைந்த(து)
இடர். 106

வானோர் கடைந்துமே
வாராத தெள்ளமுதம்
தானே திரண்டெழுந்து
தான்நடந்து—தேனார்
பொழில்புகுந்து கோயிற்
புறத்தே அமர்ந்ததுபோல்
எழில்வேழம் தோன்றும்
எனக்கு. 107

குடிகாட்டு வேழம்
குடிகாப்பான் நாளும்
குடிதழைக்கச் செல்வம்
கொடுப்பான்—குடிமாட்சி
ஓங்கும் வகையெல்லாம்
ஊக்கிப் புகழ்தந்தே
நீங்கா(து) அருள்வான்
நிலைத்து. 108

ஓம்

தும்பிக்கை துணை

# பாடல் அகர வரிசை

சென்னை அகில இந்திய ரேடியோவின் நிகழ்ச்சி அமைப்புத் துறையில் முக்கியமான பதவி வகித்து வரும் ஆசிரியர் திரு 'சோமு' (மீ. ப. சோமசுந்தரம்) அவர்கள் 1921ல் திருநெல்வேலியில் ஒரு புகழ் பெற்ற சைவக் குடும்பத்தில் பிறந்தவர். முறையான தமிழ்ப் புலமையும், ஆங்கிலக் கல்வியும், வடமொழி, ஹிந்தி ஆகிய மொழிப் புலமையும் நிரம்பியவர். சென்னைப் பல்கலைக் கழகத்தின் புலவர் பட்டமும் பெற்றுள்ளார். முப்பது ஆண்டுகள் ஒலிபரப்புத் துறையில் அனுபவம் பெற்றுள்ளதோடு, இங்கிலாந்து சென்று ஒலிபரப்புக் கலையில் சிறப்புப் பயிற்சியும் பெற்றவர். மேனாடுகளில் பரந்த சுற்றுப் பிரயாணம் செய்திருக்கிறார். சிற்பம், சங்கீதம், ஓவியம் ஆகிய கலைகளில் ஆழ்ந்த ஆராய்ச்சியுடையவர். சில ஆண்டுகள் 'கல்கி' பத்திரிகையின் ஆசிரியராகப் பணி புரிந்து அரிய பல தொண்டுகள் செய்திருக்கிறார். கட்டுரை, கதை, கவிதை, இலக்கிய ஆராய்ச்சி ஆகிய பல துறைகளிலும் அரிய படைப்புகள் செய்து தமிழ் மக்களின் உள்ளங்களைக் கவர்ந்துள்ள ஒரு முன்னணி எழுத்தாளர். சிறந்த கவிஞர். இவர் பெற்றுள்ள பரிசுகள்: 1938, பாரதி தங்கப் பதக்கம்; 1940, ஆனந்த விகடன் சிறு கதைப் போட்டியில் முதற் பரிசு; 1948, சென்னை அரசாங்கத்தின் கவிதைப் பரிசு 'இளவேனில்' என்ற இவரது கவிதை நூலுக்கு; 1951, சென்னை அரசாங்கத்தின் சிறு கதைப் பரிசு 'கேளாத கானம்' என்ற கதைத் தொகுதிக்கு; 1963, சாகித்ய அகாதெமிப் பரிசு 'அக்கரைச் சீமையில்' என்ற பிரயாண நூலுக்கு.